# ஞானக்கண்



ஞானவள்ளல்

பரஞ்ஜோதி மஹான்

அருளியது.



பரிபூரண பரஞ்ஜோதியின்

உயர்ஞான சபையோரால்

வெளியிடப்பட்டது.

மதுரை ராஜேஸ்வரி பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.



ஞான வள்ளல்

பரஞ்ஜோதி மஹான்

# ஞானக் கண்.

நெற்றிக்கு நேருள் நின்றதும்
நேரான உட்பாறை யுடைத்ததும்
நெருப்பாறு மயிர்ப்பாலங் கடந்ததும்
நெஞ்சில்யமவாதை நீக்கியதும் நாமேநாம்.

## நெற்றிக் கண்.

இந்தக்கண் இருக்குமிடம், இரண்டு கண்களுக்கும், மூக்கு சுழிமுனைக்கும், புருவ இடை நடு ஸ்தானமாகும். இந்த இடத்தில் சிறு ஊசித் துவாரத்தின் பத்தில் ஒரு பாகம்தான் இந்தக் கண்ணின் அளவு இருக்கிறது. அதுவும் மிக நுட்பத்திலும் மிக நுட்பமாயிருக்கிறது.

இந்தக்கண்ணைத் திறப்பதென்றால் அறிவோடு கருவும் நினைவுங் கலந்தால்தான் முடியும். மேலும் இதையறிந்த குருபதவியடைந்த குருவினுடைய சாமர்த்தியமும் இருந்தால்தான் முடியும்.

இந்தக்கண் திறந்திருந்தால் அறிவுக்கு நன்றாய்த் தெரியலாகும். இதை வாசியென்ற மூச்சு அப்பியாசத்தாலோ மற்ற யோகங்களாலோ திறந்துவிட முடியாது. ஆயினும் அவைகள் அதனைத் திறக்கக்கூடிய முயற்சிகளை அதிக சிரமத்தோடு செய்கின்றன. அந்த அளவில் அவர்கள்மீது மிக சந்தோஷமடைய வேண்டியது தான். எவ்வளவு முயன்றாலும் அவ்வப்பியாசங்களால் அதனைத் திறக்க முடியாது.

## திறக்கும் திறமை.

கண் இரண்டிலும் கடந்தகண் ஞானக்கண், அக்கண் முக்கண், முக்கண்ணின் முகப்பும், முனை எழுத்தால் முக்கி, அருகு நுனிவழியாய் கருஏறி வந்திருந்து அதைத் திறந்த தின்பின் அதனுட் புகுந்துபோய் இருப்பது எதுவோ அதுவே முத்திக்கு வித்தாகியதும் முன்னமே ஆதியா யுள்ளதுமான மௌன மெய்யுணர்வாம்.

இந்தக் கண்ணானது அணுவிலும் மிகச் சிறியதாக இருந்திட்டபோதிலும் அதுவே உலகங்களை எல்லாம் நிர் வாகம் நடத்தும் இராஜனின் சிம்மாசனமாகும். அச் சிம்மா சனத்தின் வாசலானது மிக மிக லேசான ஜவ்வினால் மூடப்பட்டுள்ளது. ஆனதால்தான் முக்கண்ணின் முகப்பும் முனை எழுத்தால் முக்கி என்று சொல்லியிருக்கிறேன். ஆயினும் பலாத்காரத்தினால் அதனைத் திறந்துவிட முடியாது. பலாத்கார முறையில் யோகங்கள் செய்யும் வைராக்கியர்களின் ஆசாபாசங்கள் அடங்கி, துற்குணங்கள் எல்லாம் விட்டு நல்லவர்களின் நிலைக்கு வரக்கூடிய நிலைமையை ஏற்படுத்திவிடுகிறது. ஆகையால் இவர்கள் நல்லவர்களிலும் மிக நல்லவர்கள் ஆவார்கள். ஜோதி யாகிய கருவும் நினைவாகிய இராஜனும் கலந்தால் தான் இதைத் திறக்க முடியும். இதற்கும் வயது 25-க்கு மேல் தான் சரியான பக்குவமாகும். தன் சுய முயற்சியாலோ நூல் அறிவாலோ அதனை திறந்துவிட முடியாது. அப்படி முயற்சித்தாலும் முயற்சித்தவர்கள் பெருங் கஷ்டத்திற்கு ஆளாவார்கள். இதன் விபரம் பின்வரும் உச்சிக்கண்ணில் பார்க்கவும்.

இந்த கண் திறவாதபடி யாரும் முத்தியடைந்ததும் இல்லை, அடையவும் முடியாது. முத்திக்கு இது ஒரு முதல் வாசலேயாகும்.

இந்த ஸ்தானம் குருநாடியின் முகப்பாகும். இந்த நாடிக்கு கட்டுப்பட்டுத்தான் சரீரத்திலுள்ள எல்லா நாடி நரம்புகளுமுள்ளன. பார்வை பிறப்பதும், சொல் பிறப்ப தும், கேள்வி அறிவதும், சுவை தெரிவதும், ஞானிகளுக்கு இங்கேதான். மற்றதெல்லாம் பிறப்பதும் இங்கிருந்தே. ஆராய்ச்சிகளும், நுட்பத்திலும் நுட்பமான நூதனங்கள் அறிவு செய்து முடித்ததும் முடிப்பதும் இங்கிருந்தே.

இந்த ஸ்தானத்தில் தான் புத்தி உதயமாகிறது. புத்தி என்றால் சிறு அறிவுக்கும் பேரறிவுக்கும் இடையிலுள்ள சிந்தனை என்றும் ஆராய்ச்சி என்றும் சொல்லலாம். இது மனதை அடக்கவும் விரிக்கவும் வல்லது. நன்மை தின்மை அறிவதும், தன் குற்றத்தை தானே உணரக்கூடியதும் இதுவேயாகும். இது பேரறிவுக்குட்பட்டது.

"புண்ணியப்பூ பூத்தது, பூமணம் மணத்தது,
குணக்குறை ஒளிந்தது, மனச்சேட்டை மடிந்தது,
சித்தம் தெளிந்தது, அறிவு பெருகியது,
மதி நிலைத்தது, பிறவியில்லா இடந்தன்னில்"

என்றதில் சித்தம் தெளிந்தது என்று சொல்லப்பட்ட ஸ்தானமிதுவேயாகும். மனிதருக்கு ஆசை உண்டாக் குவதும் அதிக அவாவை உற்பத்தி ஆக்குவதும் தன் தகுதிக்குமேல் சம்பாதிக்க வைப்பதும் மனதாகும்.

மனதினுடைய ஸ்தானம் நெஞ்சிலுள்ள ஹிருதய மாகும். அதனால் தான் ஒரு சமயத்தில்,

"ஒரு கண் திறந்தது, இரு கண் சிரித்தது,
இக்கண் குளிர்ந்தது, ஹிருதயக் கண் மகிழ்ந்தது,
அறிவுக்கண் அறிந்தது மூலக்கண்ணின் மூலப்
பொருளால்"

என்றதில் இருதயக்கண் மகிழ்ந்தது என்று சொல்லி யுள்ளேன்.

இந்த மனதை அடக்கும் ஸ்தானமும் ஆசையை அளவாக நிதானிக்கும் ஸ்தானமும் நெற்றியாகும். ஒரு மனிதன் எவ்வளவு ஆசாபாசத்தில் உள்ளவனாக இருந் தாலும், நெஞ்சில் உள்ள ஹிருதயத்தில் நின்று நெற்றிக் கண்ணை நினைத்தானானால் அவனுடைய ஆசாபாசங்களின் அளவை நிர்ணயித்துக்கொள்வான். ஒரு மனிதன் பெரும் பெருமைக்கும், பெருந்தன்மைக்கும் உரியவனாக வேண்டு மென்றால் நெற்றியில் வெறும் ஞாபகத்தை வைத்திருந் தால் தானாகவே உண்டாகிவிடும். இவனொரு அறிவாளி யாவான்.

இந்த இடத்தை வணங்காதவர்கள் யாருமேயில்லை. இந்த இடத்தை வணங்குகின்றோமென்றே அவரவர் களுக்குத் தெரியாமலேயே சலாமென்றும், வந்தன மென்றும், நமஸ்காரமென்றும், கும்பிடுகிறேனென்றும் சொல்லியும், பொட்டிட்டும், விபூதி அணிந்தும், நாமம் இட்டும் அவரவர்களுடைய மத ஆசாரங்களுக்குத் தக்கபடி அவரவருடைய கையையும் சைக்கினையையும்




நோக்கங்களையும் அங்கேயே சைகைகளை காட்டி நோக்கங்களை நோக்கிக்கொள்ளுகின்றனர். பெரும் இராஜாங்கத் தன்மையும் அங்கேயே. தடுக்க முடியாத வீரக்கோபம் பிறப்பதும் அங்கிருந்தே.

ஒரு மனிதனுக்கு திரேகத்தில் சூடு இல்லாமல் போனால் முன் சொன்னபடி நெற்றிக்கண்ணை ஞாபகத்தில் நினைத்தால் சூட்டை உற்பத்தி செய்துகொள்ளலாம்.

இந்த இடத்திலிருந்து பிறக்கும் சொற்கள் சமீப காலத்தில் பலித்தே தீரும்.

ஆகையால் மெய்யுணர்வாளர்களே! இந்த இடத்திலிருந்து ஒருவனை நிந்தித்துவிடாதீர்களென்றும், துற்குணமுடையவனையும் கூட இந்த ஸ்தானத்திலிருந்து துற்குணமுடையவனென்று நினைத்துவிடாதீர்களென்றும் நான் உங்களுக்கு அடிக்கடி சொல்வது ஞாபகம் இருக்கலாம், எப்பேர்ப்பட்ட பொல்லாதவனையும் அவன் நல்லவனாக வேண்டுமென்று அந்த இடத்திலிருந்து நினைத்தீர்களானால் அவன் அக்ஷணமோ மறு சமீப சமயத்திலோ நல்லவனாகியே தீருவான் என்பது நிச்சயம். ஆகையால்தான் இந்த ஸ்தானத்திற்கு ஆக்கினை ஸ்தானமென்று பெயர்.

இதுவே ஆணவமழிந்த ஆணவமுடையவர்களின் ஸ்தானமாகும். இந்த ஸ்தானத்தை நல்ல நினைப்புகளுக்கு உபயோகித்துக்கொள்ளுங்கள்.

உலகில் பலர் பலவிதமாகச் சொல்லுவார்கள். அனுபவமில்லாச் சொற்களை ஆதரிப்பதைவிட அனுபவமுள்ள

சொற்களை ஆதரிப்பது உங்களுடைய மோக்ஷத்திற்கு சாதகமாகும்.

உலக நல்லடியார்களே! பேரறிவு வேறு, அறிவு வேறு, சித்தமென்னும் புத்தி வேறு, மனது வேறு, குணங்கள் வேறு. ஆகையால் குணங்களிருப்பது நரம்பு நாடிகளில், மனது இருப்பது ஹிருதயகமலத்தில், சித்தமென்னும் புத்தி இருப்பது நெற்றி ஸ்தானத்திலாகும், பேரறிவோ உச்சியை ஸ்தானமாகக் கொண்டுள்ளது.

குணத்தை அடக்க ஹிருதய கமலத்திலும் மனதை அடக்க நெற்றியிலும் ஞாபகத்தை நிறுத்தவேண்டும். நெற்றியைக்கடந்து ஞானமடைந்தோர் பேரறிவுப் பெருக்கம் பெரும் உச்சியிலாகும். இது ஒவ்வொருவருக்கும் ஞாபகத்திலிருந்து வரவேண்டியது. மேற்கண்ட விஷயங்களிலும் பிடரிக்கண் உச்சிக்கண்ணில் நின்று அனுபோக அறிவால் முடித்தவர்களின் பெயர் நாமங்கள்தான் இன்று எல்லோராலும் கொண்டாடப்படும் பொது ஸ்தலங்களும் கோவில்களும் சின்னங்களும் பெரும் வைபவங்களுமாகும்.

ஏன் இவர்களை கொண்டாட வேண்டும்? தன்னை அறிந்து அறிவில் குறையின்றி ஆனந்தமாக அனுபவித்து தன் நிலையடைந்ததால்.

இவ்வனுபவமே இன்று நம் மெய்யுணர்வாளர்களுக்கு உண்மை, ஊக்கம், உறுதி, கரு, ஒன்றுபட்டு உணர்வாக இருந்துவருகிறது.

உங்களின் உறுதியைப்பற்றி மிகச்சந்தோஷம் உணர்வில் ஞாபகமிருந்து வரட்டும்.

உறுதியிலேயே உறுதியாய் உள்ளவர்கள் யாரோ இவ்வுலகில் அவர்களெல்லோரும் நம்மினத்தில் வந்து சேர்ந்துகொள்வர்.

மெய்யுணர்வாளர்களே! நீங்கள் அடிக்கடி ஒன்று கூடுவதில் என் ஹிருதயம் மிக மிக சந்தோஷமடைகிறது. நன்மையின் நன்னோக்க ஏக்கம் நாளுக்குநாளதிகமாக்கிக் கொள்ளுங்கள். எல்லாக் காரியங்களும் நன்மையாகவே முடியும்.

## பிடரிக்கண்.

இது பின்பக்கத்து மூளையின் நடு ஸ்தானமாகும். இந்த ஸ்தானம் எல்லாருடைய் சரீரத்திலும் இருக்கிறது என்றாலும், அந்த ஸ்தானத்தைக் கண்டு அனுபவிக்கும் ஞானிகளுக்கே உரியது. இந்தக்கண் மிக நுட்பமான கூச்சமுடையது. இது கூசக்கூச மிக இன்பமும், அறிவின் நுட்பங்களும், அதிலிருந்து அறிவிற்கு நன்றாய் விளங்கும். இது பெரும் மகத்துவமான அணுக்கள் கூடிய ஸ்தான மாகும்.

மனிதர்களுக்கு தூக்கம் வருங்காலத்தில் அறிவானது இந்த ஸ்தானத்திற்கு இரண்டங்குலத்திற்குக் கீழ் ஒடுங்கு கிறது. அதாவது அறிவின் ஓய்வே நித்திரையாகும்.

பிடரிக்கண்ணில் தன் சக்தியை நிறுத்திப் பார்க்க ஞானிகளால்தான் முடியும். இதிலேயே அதிக கால அனுபவமானால்தான் அவர்களுடைய அறிவின் பந்தம் அறிவிற்குத் தெரிந்து விடுபடுகிறது.

இந்தக் கண்ணின் கூச்சம் அதிகமாக ஆக அறிவின் வளர்ச்சியும், ஆத்ம சக்தியும் விருத்தியாகின்றது. இந்தக் கண்ணின் கூச்சம் அதிகமாக ஆக ஒரு மிளகுப் பிரமாணம் திரண்டிருக்கும். அதனுல் எற்படும் வெப்பமானது ஒரு கெஜ் சுற்றளவு சிறு பிரகாச வட்டமாய் அறிவிற்கு தெரிய வரும். இந்த வெப்பத்தின் பிம்பமே சோம வட்டமாகும்.

முத்தியின் மோட்ச ரிக்கார்டுகள் அங்கேயே அடங்கி யுள்ளன. ஆதலால் அறிவிற் சிறந்தவர்களே! இதனை அறிய முற்படுங்கள். இதனை அறிய துரிதப்படுவது மிக நல்லது. இந்தக் கண்ணின்மூலம் தச நாதங்களைக் கேட்கலாம். இதன் விபரங்களை ஒரு மொழியில் பார்க்கவும்.

மெய்யுணர்வாளர்களே! நீங்கள் எப்பொழுதும் எந்தக் காரியத்திலும் சந்தோஷமாய் இருக்கவேண்டியது. நீங்கள் சந்தோஷமாக இருந்தால் வியாதியுமில்லை, மருந்தும் தேவையில்லை.

உலகத்தை ஆளக்கூடிய சக்தி அரூபத்திலிருந்தபோதி லும் இச்சபையோரிடம் அது மெய்யுணர்வாய், சொந்த மாய் இருந்துவருகிறது.

நீங்கள் யாதொன்றுக்கும் அஞ்சவேண்டாம். நடந்த தெல்லாம் நன்மைக்கே. பின் ஆலோசித்துப் பார்த்தீர் களானுல் அதுவும் ஒரு பெரும் நன்மையாகவே முடியும். இதுவரை நடந்துவந்த காரியங்களுக்கும் நாமே, நடக்கும் காரியங்களுக்கும் நாமே, நடக்கப்போகின்ற பெரும் ஐக்கிய பதவிக்கும் நாமே நாம்.

நாயகன், நாயகன்செயலென்று சொல்லி நழுவ விடாமல், நல்லறிவாய் நாட்டம் கொண்டீர்களானால் நல்ல இடத்தில் நாயகனும் நாமும் ஒன்றே.

குற்றமுடைய குணங்களை நீங்களே சேர்த்துக் கொண்டு குறையில்லா சக்தியின் பேரில் குறை சொல்லாதீர்கள். பொருளுடையவர்கள் இவ்வுலகத்தில் திருடர்களுக்குப் பயப்படுவதுபோல் அருளுடையவர்களாகிய நீங்கள் குறையுள்ள குணங்களுக்கு இடம் தராதீர்கள், தாவும் மாட்டீர்கள்.

மூட்டைப்பூச்சியினுடைய இரத்தம் கடுமையான ஜன்னியைப் போக்குமானாலும், அதன் வாடையும் சேஷ்டையும் அதிக கெட்டது. ஆகையால் உலகத்தில் அநேக குணங்கள் உள்ளன. அந்த குணங்களுக் குரியவர்கள் அநேகராவர். அவர்களை நீங்கள் குறை சொல்லாமல் அவர்களிடத்தில் உள்ள நல்ல குணங்களைமட்டும் கிரஹித்துக்கொள்ளுங்கள். கடலிலுள்ள மீனானது கடல் உப்பில் சாராததுபோல் உலகத்திலுள்ள நல்லடியார்களாகிய நீங்கள் உலகத்திலுள்ள ஆசாபாசங்களில் சாரவே மாட்டீர்கள். ஒரு சிறு பெரும் ஆக்கினையால் இந்த அரசாங்கம் நடந்து வருகிறது. நாம் நமது மெய்யுணர்வின் சக்தியை நமது சிம்மாசனத்தில் வைத்து நமது குணத்தை ஆண்டு வருகிறோம்.

## நெருப்பாறும் மயிர்ப்பாலமும்.

இது மனித சரீரத்தில் 12 அங்குலம் முதல் 18 அங்குலம் வரை உள்ளது. இது வில்லைப்போல் வளைக்

துள்ளது. வாளினும் வெகு கூர்மையுள்ளது. ஒரு ரோமத்திலும் எத்தனையோ பங்கு சிறியதாயுள்ளது. மிக நுட்பத்திலும் பெரும் நுட்பமான பிரகாச அணுக்கள் கோர்வையாய் இணைந்துள்ளது. இதைக் கடந்து சென்ற அறிவிற்குத்தான் இதன் விபரம் தெரியும், இதனுடைய அழகு அதிக போற்றுதலுக்குரியது. இந்த மயிர்ப் பாலத்தில்செல்ல கருவுடன் நினைவுங்கலந்த அறிவால்தான் முடியும். அறிவை மதி என்றும் சொல்லலாம். அறிவிற்கும் கடந்த நினைப்பு அதிக சூடாய் உள்ளது. அந்த சூட்டைத் தான் மூலக்கனலேன்று சொல்வது. இந்த கருத்தைத் தான், மதியைக்கொண்டு விதியை வென்றீர் என்று நாம் பேரறிவில் சொல்லியிருக்கிறோம்.

இதனுடைய பிரகாசம் அறிவிற்கு நன்றாய் விளங்கும். பதினாறு வயதிற்கு மேற்பட்டு தற்கொலையின்றி சாகக் கூடியவர்கள் எல்லோரும் இந்தப் பாலத்தைத் தாண்டித் தான் இறக்கிறார்கள். இதன் விபரத்தை நமது பரஞ் ஜோதியில் பார்க்கவும். மதியால் விதியென்ற கரு மயிர்ப் பாலத்தைக் கடக்கும் வரையிலும் மரண அவஸ்தை யுண்டு. பாலத்தை தாண்டியபின் பேரானந்தமாகிய தெளிவு ஏற்படுகிறது. இந்த தெளிவு ஏற்பட்டபின்தான் விந்தா யுள்ள கரு ஸ்கலிதமானவுடன் அறிவும் சூக்குமமும் பிரிந்து கொள்கிறது. இதுவே மரணமெனப்படும்.

அறிவோடு இருக்கும் மக்கள் தங்கள் ஸ்தூலம் நல்ல நிலைமையிலிருக்கும்பொழுதே இந்த பாலத்தைத் தாண்டப் பழகிக்கொள்ள வேண்டுமென்ற நோக்கமே ஞானத்தின்

பெரும் நோக்கமாகும். இதில் சதா இருக்கக் கூடியவர்களுக்குத்தான் ஞானிகளென்று பெயர். இதை கடினமென்று பலரும் பல நூல்களும் முறையிட்டிருக்கின்றன. அந்நூல்களும் அவர்களுடைய சொற்களுமே உங்களுடைய மனதை கடினப்படுத்தி வைத்திருக்கிறதேயொழிய அதில் சென்று அனுபவித்ததின்பின் அது மிக எளிதாயுள்ளது என்பது தெரியவரும். ஆகையால் ஒவ்வொருவரும் தன் மனதையும் அறிவையும் பாழ்படுத்திவிடாதபடி அதை அறிய முற்படுங்கள்.

மெய்யுணர்வாளர்களே! உங்களின் வியர்வை நீரில் உண்டான மூட்டைபூச்சிக்கு எவ்வளவு தந்திரமும் சேஷ்டையுமிருக்கிறதோ, அதேபோல் உங்களின் மாய்கையினாலுண்டான மனதின் சேஷ்டையும் அநேகமுண்டு. அதையடக்குவதற்க்குரிய தெளிவான தவமும் தன் அறிவின் சாமர்த்திய பெருக்கமும் கிடைத்திருக்கிறது. ஆகையால் உங்களின் தைரியத்தால் சாமர்த்தியத்துடன் அறிந்து அறிந்து தெளிந்துகொள்ளுங்கள்.

## உச்சிக்கண்.

தென் நாடும் வட நாடும் கண்ணிடைநடு நாடும்,
கீழ்மூல நாடும், அறிவமுத நாடும், கூடிக்குலாவும்
நந்நாடு அந்நாடு என் நாடு சென்னி நாடே.

மெய்யுணர்வாளர்களே! உச்சிக்கண், நெற்றி பிடரி இருகாதுகளுக்கும் நேர்மத்தி மேலுள்ளது. இந்தக் கண் கடைசிக் கண்ணாகும். எல்லோரும் அவரவர்களுக்குத்

தெரியாமலும், தெரிந்தும், இந்தக்கண்ணை நாடிக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் நெற்றிக்கண் திறந்தபின் தான் இந்தக்கண் திறந்து காணமுடியும். நெற்றிக்கண் திறந்து செல்லும் பாதையானது ஒரு தூண்டிமுள்போல் வளைந்துள்ளது. இக்கண் வெகுகாலம் யோகங்கள் செய்வதாலும் தங்களுக்குத் தெரியாமலேயே திறந்துகொள்வதும் உண்டு. அப்படி அசந்தர்ப்பமாய்த் திறந்துகொண்டால் திறப்பதற்குரிய பொருள் அவ்விடமே விளைந்து தலைப்பாரம் பொறுக்கமுடியாமல் சிரசு வெடித்துவிடுவதுமுண்டு. அப்படி இல்லாவிடில் கண்களின் மூலமாகவோ காதுகளின்மூலமாகவோ வெளிப்பட்டு சரீரத்தை போட்டுவிடும்படியான நிலைமையும் ஏற்படலாம். அவ்விடத்தில் ஏறிய பொருளின் விளைவும் வல்லமையும் குறைந்திருந்தால் அறிவை மயக்கி அறிவினர்களாய் ஒரே நிலையில் வைத்துவிடுவதுமுண்டு. மேற்படி நிலையடைந்தோர்களுக்கு நன்மை, தீமை என்பதையும் அறியமுடியாமல் அறிவின் வளர்ச்சி தடைப்பட்டு வெகுகாலம் இருந்துவிடுகிறார்கள். இவர்களையும் உலக மக்கள் ஞானிகளென்றே சொல்லுவார்கள். இவர்களும் இவர்களின் குருவும் சரியான பாதைகளில் சென்று வழிகாணாதவர்கள் ஆவார்கள். இவர்களுக்கும் பிறவியுண்டு. இதிலும் எத்தனையோபேரில் ஒருவர், தன் அறிவின் உழைப்பால், விழிப்பால், அறிந்து சரியான முத்தி நிலை அடைவதுமுண்டு.

இச்சபையோர்கள் எந்தச் சுமையையும் எப்போதும் தலையில் சுமக்கக்கூடாது. தோளில் சுமந்து செல்லலாம்.

## வலம்புரிச்சுற்று.

நெற்றிக்கண் திறந்து உச்சிக்கண் சென்று இருக்கும் பழக்கமுடையவர்களுக்கு வலம்புரிச்சுற்று மிக தெளிவாய் தங்கள் அறிவிற்கு உணர்வினுள் உணர்ச்சியாய்தெரியவரும். இந்த வலம்புரிச்சுற்றினல் அறிவினுடைய அளவும் முடிவும் தெரியும். இந்த வலம்புரிச்சுற்று அதிகரிக்க அதிகரிக்க சுற்றின் வேகத்தால் அறிவிற்கு அப்பாற்பட்ட விஷயங் களை அறிந்து முடிக்கலாம். இந்தச் சுற்று அதிகரிக்க அதிகரிக்க குளிர்ந்த ஆனந்தப் பூரிப்பு உண்டாகும். இந்தப் பூரிப்பால்தான் ஒரு கண் திறந்தது என்று சொல்லி யிருக்கிறேன். இந்த சுற்றுல் உண்டாகும் இன்பம் வரை யறையற்றதாகும். இந்த சுற்றின் அதிகரிப்பால் தவப் பற்றுதலும், அன்பு, பொறுமை, பெருந்தன்மை, பேரறிவு தானகவே வளரும். இந்தச் சுற்றுல்தான் ரசமணி திரள் வதும் ஆறுதாரங்களென்ற திரைகளாகிய ஐவ்வுகள் கிழிவதும் ஆகும். இந்த சுழலில் அனுபவமுள்ளவர்கள் எந்த பற்றுதல்களிலும் பற்றற்ற நிலையிலிருப்பர்.

கடத்திலோர் இடத்தில் கரந்த ஞானப்பாலை
கனலான மூலக்கனலால் மூட்டி மூட்டி
கம்ப நுனிவழியாய் கண்மூக்கு மத்திபத்தில் ஊட்டி ஊட்டி
கருத்திற் கிசைந்த சுவையை கபாலம் ஏற்றி ஏற்றி
தண்மணி போல் ரசமணி திரள திரள
கண்ணுக்கு தெரியா திரையாறும் தன் திறமையால் திறக்க திறக்க,
தன் காரணத்தை தானே தெரியலாமே.

இந்த சுற்று சுற்றும் விபரம் ஒரு பெரிய மெயின் தண்ணீர் குழாயில் தண்ணீர் வேகமாய் ஓடிக்கொண்டிருக்கும்போது குழாயின் பேரில் ஒரு பொடி ஊசித்துவாரம் எற்பட்டு அதன்வழியாக தண்ணீர் எப்படி பீரிடுமோ அதே போன்று அளவுடையது. அது ஒரு கெஜம் வரை சுற்றுவது சுழலாக விளங்கும். இந்த சுற்றின் சுழல் பரவிச் சுழல பெரும் இன்பம் உண்டாகும். இது நெற்றி, உச்சி, பிடரி இங்கெல்லாம் மிகச் சுகமான பூங்காற்று சுழன்று அடிக்கும்.

நல்ல இராகம், சப்தம், பிடில், வீணை, புல்லாங்குழல், மோர்சிங் இவைகளின் தொனிகளை சிறு தூரங்களிலிருந்து கிரஹிக்கும்பக்ஷத்தில் இந்த சுற்று தெளிவாக விளங்கும். படுத்திருந்தாலும் இந்த சப்தத்தை சுழல் தானே வாங்கிக் கொண்டு சுழலுவது மெய்யுணர்வாளர்களுக்கு நன்றாகத் தெரியும். மற்றொரு வகையில் எப்படி என்றால் சிறு சூறு வளிக்காற்றைப் பார்த்திருந்தீர்களானால் அதைப் போன்றும் உதாரணம் சொல்லலாம். வீசன் காலங்களில் சிறு பனிச் சாரல் அடிக்கும்போது தம் முகங்களில் எப்படி உணர்ச்சி உண்டோ அதேபோல் சிற்சில சமயங்களில் தெரியவரும். சரீரம் நிமிர்ந்திருப்பதுடன் சரீர சதைகளை தளரவிட்டு மெதுவாய் மிக நுட்பமாய் கவனிக்கவேண்டும். உதாரணம் ஒரு மெல்லியகடுதாசியை தண்ணீரில் நனையவைத்து அதை மெதுவாய் கிழிப்பதுபோன்று கவனிக்கவும். நித்திரையின்றி நாம் படுத்திருக்கும்போது தண்ணீரில் நனைந்து வந்த நல்லபாம்பு நம் வயிற்றின்மேல் சுழன்று படுத்துக் கொண்டால் எப்படி செளி செளிப்பும், கனமும் குளிர்ச்சி

யும் உணர்ச்சியில் தட்டுமோ அதைப்போன்று சுத்திசெய்த இடத்தில் சுழன்று சுற்றுவது தெரியவரும்.

இந்தச் சுற்றை இணைவைத்துத்தான் பெரும் சமாதிகளையும் கோவில்களையும் வலமாக சுற்றிவருவதும் மற்ற வைபவங்களெல்லாம் வலம்புரியாகவே சுற்றுவதுமியற்கை; மற்ற எல்லா இயந்திரங்களும் ஓடும் சக்கரங்களும் வலம்புரியாகவே சுற்றுகின்றன.

அதிக புளிப்பு, உரப்பு ஆகாரங்களிருந்தாலும் அளவுக்கு மீறி போகமிருந்தாலும் இதற்குத் தடை ஏற்படும். சுவையான தித்திப்பும் சத்தான ஆகாரமும் நல்ல வாசனைகளும் இதற்கு மிக மிக உற்சாகம் அளிக்கும்.

ஆகையால் மெய்யுணர்வாளர்களே! அடி மூலத்தி லுள்ள பொருள் அறியாதபோது அடியேன்என்பது தகும். அடிமூலத்தில் உள்ள பொருள் அம்பலத்தில் ஏறி அப் பொருள் மெய்யுணர்வாய் இருப்பதால் அடியேன் என்று இனி எழுதவோ, பேசவோ வேண்டாம். அநேகம் பிறவி களில் ஊழியம் செய்து செய்து, தேடிய மெய்ப்பொருள் கிடைத்து அப்பொருளே மெய்யுணர்வாய் இருப்பதால் ஊழியனென்றும் இனி எழுதவும், பேசவும் வேண்டாம்.

உலகத்தில் எல்லோரையும் ஒரே கொள்கையாளராக்க முற்படுவதும், எல்லோரையும் சீர்திருத்தம் செய்யவேண்டு மென்று நினைப்பதும், எதைப்போன்று என்றால் பெரும் நெருப்பை தன்கண்ணீரால் அணைக்க முற்படுவதுபோன்று. ஆகையால் மற்ற குணங்களை குறையாகவோ துவேஷமாகவோ நினைத்தல் கூடாது.

## உயிர் உலாவும் இடங்கள்.

அடிமூலம், ஹிருதயகமலம், பிடரிக்கண், நெற்றிக் கண், மூளையின் அடிப்பாகம் இவ்வைந்து இடங்களாகும். ஒருவருக்கு சாந்தம் உண்டாகவேண்டு மென்றால் கண்பட்டையை கீழே நோக்கி மூக்கு முனையில் பார்வை வைத்தால், உடனே சாந்தமுண்டாகும்.

## வலம்புரி சுற்றல் கண்களுக்குண்டாகும் நன்மைகள்.

கண்ணையுமறிந்தேன், அறிந்தீர்; கண்ணிலுள்ள காரண தேவநிலையும் அறிந்தேன், அறிந்தீர்; காரணத்தையும் அறிந்து, காரணத்தையும் கடந்த பரமானந்தத்தையும் அடைந்து மொழிந்தேன், மொழிகின்றேன், இவ்வுலகத் திற்கும் எவ்வுலகத்திற்குமே.

வலம்புரி சுற்றல் கண்கள் இரண்டும் குளிர்ந்திருக்கும். கண்ணுக்குளுள்ள கரும்புள்ளிக்கும் நடுவேயுள்ள சிறு புள்ளிகள் இரண்டிலும் (வஸ்து என்று சொல்லப் படும் வஸ்துவில்) சிறு பூங்காற்று மிக மிக சுகத்துடன் வலம்புரியாய் சுழன்று அடிப்பதுடன் ஒரு பொடி ஊசி சுற்றிக் குடைவதுபோல் நன்றாகத் தெரியவரும். அதனால் கருணை மிக உண்டாகும். ஆகையால்தான் இக்கண் குளிர்ந்தது என்று சொல்லப்பட்டது.

கண்கள் ஏகாக்ர சக்தியை வாங்கக்கூடிய உப கருவி யாகும். ஆகையால் கண்களை ஒவ்வொருவரும் பாதுகாத்

துக்கொள்வது மிக உத்தமம். இதெல்லாம் மூலக் கண்ணின் மூலப்பொருளால் ஆகவேண்டியது.

மூலக்கண்ணின் மூலப்பொருளைக்கொண்டு ஞானக் கண்ணைத் திறக்கப்பட்ட மெய்யுணர்வாளர்களுடைய செய்கை இதுவாகும்.

ஞானத்திலும் போகத்திலும் விழித்திருந்தால் விந்து கசியாது. ஆனால் நிதானமாய் இருக்கவேண்டும்.

கண்ணோ, நெற்றியோ விந்துவின் ஸ்தானமாகாது. கண்களை இமையாதபடி கண்களிலிருந்து நெற்றியைக் கவனித்தால் மிக திடசித்தம் உண்டாவதுடன், தன் வியாதியாவையும் போக்கும். 5 முதல் 20 நிமிஷங்கள் வரை பழகி நாளடைவில் கூட்டிக்கொள்ளவேண்டும். இச் சபையில் சேராதவர்கள் ஐந்து நிமிஷங்களுக்கு மேல் கவனிக்கக் கூடாது.

கண்களாலும் மெய்யுணர்வாளர்கள் தவத்தை அதிகரித்துக்கொள்ளலாம். குளிர்ந்த காற்றுள்ள இடங்களிலும், எரிச்சலில்லா வெளிச்சமுள்ள இடங்களிலும், காலை மாலை நேரங்களிலும், நிலாக்காலங்களிலும் இதன் அபிவிருத்தி அதிகமுண்டாகும்.

கண்களிலுள்ள கரும்புள்ளிகள் குழந்தை பிறந்த தேதியில் இருந்த அளவு கூடுவதுமில்லை குறைவதுவும் இல்லை. கண்களுக்கு நிழல் கிடையாது. ஒருவரிடம் பேசும்போதோ ஒருவர் பேச்சைக் கேட்கும்போதோ கண் இமையாதபடி இருந்துகொள்ளவேண்டியது. புகையுள்ள

இடங்களிலும், நெருப்பின் வெப்பத்திலும், துர்நாற்றம் உள்ள இடங்களிலும், சரியான வெய்யிலிலும் கண்களை அதிகமாக விழித்துக்கொண்டிராமல் கண்களைப் பாது காத்துக்கொள்ளவேண்டியது.

கண்களால் மனோவசிய சக்தியும் சிற்சில சித்து களையும் செய்து முடிப்பர். ஆனால் இச்சபையோர்கள் இது வகைகளில் முற்படக்கூடாது.

மெய்யுணர்வாளர்களே! உங்கள் மனதிலுள்ள ஜாதி மத துவேஷங்களை நீக்கினீர்கள். எல்லா ஆத்மாக்களுக்கும் ஜீவனுயிருக்கும் ஜீவனுடைய பதவி ஒன்றே என்றறிந்தீர் கள். அவரவர்கள் கொண்டுள்ள தவமும், வைராக்கியமும் அவரவர்களின் மனதிலுள்ள மாசுகளை நீக்கிக்கொள்ளுவ தற்கும் தான் எடுத்த பிறவியை அறிவோடு முடிப்பதற்கு மாகவே.

அவரவருடைய வைராக்கியத்துடன் தவம் பக்குவ மடைந்தால் அணுக்களிலுள்ள அழுக்கை நீக்கி அவரவ ருடைய பிறவியை முடித்து ஐக்கியமடைவார்கள். அதுவே மோக்ஷம், முத்தி எனப்படும்.

மெய்யுணர்வாளர்களே! நீங்கள் யாதொரு மனக்குறை யில்லாமலும் குறையாத செல்வத்திலிருந்து அதில் சாராத குணத்துடன் தன்நிலை தவத்தின் செல்வத்தால் பூரணம் பொருந்தி, புகழோங்கி, புகழ்பெறும் ஐக்கியமாவீர்கள் என்பது நிச்சயம்.

எமது தைரியசாலிகளே! நீங்கள் மிக தைரியமுடைய வர்கள். எப்போதும் தைரியமாயிருத்தல்வேண்டும். அத்துடன் இந்த உலகத்தோடு ஒட்டி வாழ்வதில் மிக மிக நன்மைகள் உண்டு. பல சந்தர்ப்ப வித்தியாசத்தால் தன் வீட்டிலாவது, தெரிந்தவர், இனத்தார் வீட்டிலாவது, சிற்சில நோய்கள் வருங்காலத்தில் முதலில் செய்யவேண்டிய முறை என்னவென்றால் நீங்கள் சந்தோஷ முகச்செழிப்புடனும், தைரியத்துடனும் இருப்பதுடன், வீட்டிலுள்ளவர்களிடத்திலும், நோயாளியிடத்திலும், மற்ற சுற்றத்தாரிடத்திலும் சந்தோஷத்துடன் தைரியமாய் பேசவேண்டும். அத்துடன் எந்த வகையில் தைரியத்தை ஊட்டவேண்டுமோ அந்த வகையில் ஊட்டிவிடவேண்டும். அப்படி செய்துகொள்வதில் பெரும் நன்மை உண்டு. எப்படி நன்மை உண்டு என்றால் உங்கள் மனதும் சுற்றத்தாருடைய மனதும் தைரியத்தில் இருப்பதால் இருதயத்தில் உள்ள இரத்தம் சுத்தமாய் சுழல்கிறது. அப்படி சுழல்வதால் தைரியத்தின் ஞாபகத்தால் வியாதியஸ்தர்களிடம் தைரிய சக்தி அணுக்கள் நுழைந்து அவர் மனதை தைரியப்படுத்தி சந்தோஷமாக்கும். அத்துடன் அதற்குரிய பக்குவமுறை செய்துவந்தால் போதும். முக்கியமான தைரியத்தின் பாகம் இரத்த அணுக்களுக்கு உரியது. இந்த அணுக்கள் சரிவர இருந்தால் எப்பேர்பட்ட வியாதியும் நீங்கும்.

வயது அதிகமாகி நமது சபையில் சேராதவர்களாயிருந்தாலும் தைரியத்துடன் இருந்து சரீரத்தைவிட்டு ஆத்மா விலகிவிட்டாலும் அவர்களுக்கும் பெரும் நன்மை உண்டு. தைரியத்தின் வேகத்தால் ஆத்மா சூக்கும லோகத்தில்

சென்று சுகத்துடன் தன் மறதியிலிருந்து தைரியத்துடனும் மீண்டும் சுறுசுறுப்புடன் இவ்வுலகத்தில் பிறந்து வருங்காலத்தில் நன்மைக்குரியவர்களாய் வருவார்கள் என்பது நிச்சயம்.

உங்களுடைய சரீரம் சுலபமாய் கிடைத்ததல்ல. எவ்வளவோ காலம் எடுத்துக்கொண்ட பிரயாசையால் கிடைக்கப் பெற்றது. அதனுல்தான் சுமார் ஆயிர வருடம் இந்த ஸ்தூலத்தில் இருந்து அனுபவித்தாலும் சரீரத்தைவிட, யாருக்கும் சம்மதிக்கவே சம்மதிக்காது. அதைப்போன்றே உங்களுக்குக் கிடைத்திருக்கும் சத்திய மெய்யுணர்வும் எவ்வளவோ பிறவிகளால் முயற்சி எடுத்து கிடைக்கப்பெற்றுள்ளது. எந்த வேலையிலிருந்தாலும் சத்தியம் மெய்யுணர்வை பாதுகாத்துக்கொள்ளும், உணர்வை நீங்கள் பாதுகாத்துக்கொள்ளுங்கள். உங்களின் அவாவை முடிக்கும் வரையிலும் உயிருக்கு பயமே இல்லை. மெய்யுணர்வு அதிகம் ஆக ஆக எல்லா விபரமும் தெரிவதுடன் முன் உள்ள பிறவியும் உங்களுக்குத் தெரியவரும். எந்த வியாதியஸ்தர்களுக்கும் தங்கள் வியாதி தங்களைக் கொன்றுவிடும் என்ற பயமே வேண்டாம். தன்குற்றத்தாலும் சந்தர்ப்ப வித்தியாசத்தாலும் வியாதிக்குக் காரணம் தானேதான். ஆனுல் சத்திய மெய்யுணர்வு இருந்துவந்தால் தன்னுல் வந்த வியாதி தானே போகும் என்பது நிச்சயம்

ஆகையால் பெரும் சந்தோஷத்துடன் இன்றைய பிரசங்கம் இனிது முடிவுற்றது.

---

# பரிபூரண பரஞ்ஜோதியின் உயர்ஞான சபை.

எல்லாச் சபைகளுக்கும் குருஸ்தானம் வகிப்பவர்

## ஞானவள்ளல் பரஞ்ஜோதி மஹான் அவர்களே.

*தலைமை சபை — மதுரை.*

தலைவர்: மெய்யுணர்வாளர்: M. G. நாயுடு, (Retd. Teleg.)
காரியதரிசி ,, B. சுந்தரராஜன், (Clerk, Municipal Office)
உபகாரியதரிசி ,, T. B. தேசிகாச்சாரி.
பொக்கிஷதார்: ,, M. N. குப்புசாமி ஐயர், (Cloth Merchant)
ஆடிட்டர்: ,, S. முத்துசாமி பிள்ளை, (Revenue Officer, Madura Municipality)

*நிர்வாகஸ்தர்கள்.*

1. மெய்யுணர்வாளர்: வெ. முத்து சேர்வை, (Land lord)
2. ,, ப. இபுருஹிம் சாஹிப்.
3. ,, P. இராக்கப்பக்கோன், (Land lord)
4. ,, வெ. சின்னத்தம்பி சேர்வை, (L. F. Auditor)
5. ,, நாட்டாமை R. சுப்பய்யர்.
6. ,, G. மஸ்தான் சாஹிப், (Mill Owner)
7. ,, K. செல்லையா பிள்ளை.
8. ,, ச. கந்தன், (Mill Supervisor)
9. ,, M. V. கிருஷ்ணய்யர்.

(நெ. 1, மேல வடம்போக்கித் தெரு, மதுரை.)

*கிளை சபை — சென்னை.*

தலைவர்: மெய்யுணர்வாளர்: C. கோவிந்தராஜுலு முதலியார், (Chief Cashier S. V. O. C. Madras)
பொக்கிஷதார்: ,, V. N. குமாரசாமி, (Prop. சாயத்தொழிற்சாலை)
காரியதரிசி: ,, N. சின்னைய செட்டியார், (Land lord)
உபகாரியதரிசி: ,, N. R. ராஜகோபால் நாயுடு, (Proprietor. Confectionery Works)

*நிர்வாகஸ்தர்கள்.*

1. மெய்யுணர்வாளர்: கோவிந்தராஜுலுநாயுடு, (Retd. Naval. Ofr)
2. ,, G. ஆராவமுது பிள்ளை, (Clerk M. S. M. Ry.)
3. ,, P. வரதராஜுலு பிள்ளை, (Land lord)
4. ,, C. D. கன்னியப்ப சுவாமிகள், (Land lord)
5. ,, M. ஜம்புலிங்க முதலியார், (Land Lord & Merchant)
6. ,, H. நயினுமுஹம்மது காதிரி.

(390, திருவொற்றியூர் ஹைரோட், சென்னை.)

# பரஞ்ஜோதி மஹான் அவர்கள்

## அருளிய உயர்ஞான நூல்கள்.

1. ஒருமொழி.
2. பேரறிவு.
3. பரஞ்ஜோதி.
4. ஞானக்கண்.

அச்சில்:—

**ஆதியும் உலக இணைப்பும்.**

ஷை புத்தகங்கள் கிடைக்குமிடம்:—



1. C. D. கன்னியப்ப சுவாமிகள்,
   290, சைனாபஜார்,
   ஜி. டி. மதராஸ்.

2. N. R. ராஜகோபால் நாயுடு,
   9, மலைப்பெருமாள் தெரு,
   ஜி. டி. மதராஸ்.




3. பரிபூரண பரஞ்ஜோதியின் உயர்ஞான சபை,
   மதுரை & சென்னை.

4. V. N. குமாரஸ்வாமி,
   216, திருவொற்றியூர் ஹைரோட்,
   தண்டையார்பேட்டை, சென்னை.

5. எல்லா ஹிக்கின்பாதம் புக்ஸ்டால்களிலும், சுதேசமித்திரன் புக்ஸ்டால்களிலும் கிடைக்கும்.